# இன்னும் சில வினாக்கள்

## STILL A FEW MORE QUESTIONS

ஈரோடு தமிழன்பன்

Translated by
Prof. S.A.SANKARA NARAYANAN

# இன்னும் சில வினாக்கள்

## STILL A FEW MORE QUESTIONS

ஈரோடு தமிழன்பன்

Translated by
Prof. S.A.SANKARA NARAYANAN

பாப்லோ - பாரதி பதிப்பகம்
10, செல்லம்மாள் தெரு
செனாய் நகர்
சென்னை - 600 030
9444184753

## நூல் விவரக் குறிப்பு

| | |
|---|---|
| நூல் பெயர் | இன்னும் சில வினாக்கள்<br>Still a few more Questions |
| தமிழில் | ஈரோடு தமிழன்பன் |
| ஆங்கில மொழி பெயர்ப்பு | பேரா. எஸ்.ஏ. சங்கரநாராயணன்<br>9442 211501 |
| வகைமை | கவிதை |
| பதிப்பு | 2015 |
| பக்கங்கள் | 72 |
| கணினி அச்சு | வெல்கின் கணினி<br>சென்னை - 600 041<br>9444 535771 |
| மெய்ப்புத் திருத்தம்<br>வடிவமைப்பு | 'விழிகள்' தி. நடராசன்<br>9444 265152 |
| அச்சு | பிரின்டெக் இந்தியா<br>சென்னை - 600 005 |
| வெளியீடு | பாப்லோ-பாரதி பதிப்பகம்<br>10, செல்லம்மாள் தெரு<br>செனாய் நகர்<br>சென்னை - 600 030<br>9444 184753 |
| விலை | ரூ. 50 |

# விடைகளின் நாட்டில் வினாக்களே குடிமக்கள்

எப்போதும் வினாக்கள் இருந்து கொண்டு தான் இருக்கின்றன. விடைகள், இருக்கின்றன என்றும் சொல்ல முடியவில்லை; இல்லை என்றும் சொல்ல முடியவில்லை. பிரபஞ்சமே வினாக்கள் கொட்டிக் கிடக்கும் இடமாகத்தான் இருக்கிறது.

வினாக்களிடையே வாழ்வதன் மூலம்தான் வாழ்க்கை இயங்குகிறது; அர்த்தப்படுகிறது. தேடல்களை உருவாக்குகிறது. விடைகள் பிறக்கும் முன்பே பிறந்தவை வினாக்கள்; அதுமட்டுமன்று விடைகள் பிறக்கக் காரணமானவை. நிறைவடையும் விடைகள், மேலும் பத்து வினாக்களைப் படைத்துத் தருகிறது.

அறிவிலிருந்து சில வேளை வினாக்கள் கேட்கப்படுகின்றன; ஐயங்களிலிருந்தும், ஆராய்ச்சி களிலிருந்தும், தயக்கங்களிலிருந்தும், தவிப்புகளி லிருந்தும் கேட்கப்படுகின்றன. வினாக்களுக்கு யாரும் மதிப்பெண் தருவதில்லை. விடைகளுக்கு -

அளவறிந்து, சரி அறிந்து - மதிப்பெண் தருகிறார்கள். நல்ல வினாக்கள் சில சமயங்களில் - மதிப்பெண்களை நம்பிப் பிறப்பதில்லை. கேட்பவனின் மனோ பாவத்தை நம்பி, மேதைமையை நம்பிப் பிறக்கின்றன.

கனாக்களிலிருந்தும், கற்பனைகளிலிருந்தும் வினாக்கள் கேட்கப்படுவது உண்டு. உணர்வின் அசைவுகளிலிருந்தும், மனத்தின் இனம் புரியாச் சலனங்களிலிருந்தும் வினாக்கள் பிறப்பது உண்டு. இவற்றை வினவுகிறவனுக்கும், கேட்பவனுக்கும் விடைகள் நேரடியாகத் தேவையில்லை. வினாக் களில் அமர்ந்து செய்யும் பயணங்களின் அனுபவங்களே முதன்மையானவை; தேவை யானவை. உண்மையில், அவற்றில் உள்ள வினாத் தன்மைகள், விந்தையானவை; புதிரானவை; புரியாதவை. புரிவனவற்றோடு மட்டுமே வாழ்க்கை என்று முடிவு கட்டாமல், புரியாதவையோடும் புதிரானவையோடும் - வாழ முற்பட்டால், ஒவ்வொரு நொடியின் பரிமாணத்திலும் துடிப்பும், தவிப்பும், நிறக்கலவைகளின் நிழல்களும் - ஒளிக் கண்சிமிட்டல்களும் நிரந்தரப்படும்; அது நிச்சயம்.

உலகப் புகழ்பெற்ற கவிஞன் பாப்லோ நெருதாவின் நூற்றாண்டு விழாவை (2004) ஒட்டிக் ‘கனாக் காணும் வினாக்கள்’ என்னும் நூலை விழிகள் பதிப்பகம் வழி நான் வெளியிட்டேன், அவருடைய ‘வினாக்களின் புத்தகம்’ என்கிற கவிதைத் தொகுப்புத் தந்த உந்துதலால்.

இப்போது மீண்டும், 'இன்னும் சில வினாக்கள்' என்னும் இந்நூல் வெளி வருகின்றது. நேரம் கிடைக்கும் போதெல்லாம், இப்படி வினாக்கள் என்னுள் வந்து எழுதச் சொல்கின்றன; எழுதுகிறேன். இவ்வினாக்கள், தன்னை உணர்ந்த நிலையில் எழுவதில்லை; தன்னை மறந்த நிலையிலும், தன்னை இழந்த நிலையிலும் கோப்பையில் திராட்சைச் சாறு நிரம்புவதுபோல் - கவிதையில் நிறைந்து, நுரைத்து வழிகின்றன; பருகிப் பாருங்கள். உங்கள் கோப்பையில் நீங்களும் இப்படி நிரப்ப முடியும்.

இந்நூலுக்கு அழகிய அர்த்தம் ததும்பும் முன்னுரை வழங்கிய தமிழறிஞர், முனைவர் இராம. குருநாதன் அவர்களுக்கு நன்றி.

எனக்கு 'மொழி பெயர்ப்புத் திருமூலராக'த் தோன்றும் பேராசிரியர் திரு. எஸ்.ஏ. சங்கரநாராயணன் தான் இந்நூலையும் ஆங்கிலப்படுத்தியுள்ளார். அவருக்கு என் நன்றியும் அன்பும் நல்வாழ்த்துகளும் என்றும் உண்டு.

இந்நூலையும் வழக்கம்போல் அழகின் கைத்தலம் பற்ற ஆக்கித் தந்த விழிகள் தி. நடராசன் அவர்களுக்கு என் இனிய வாழ்த்துகள்.

## அணிந்துரை

பேராசிரியர், முனைவர் **இராம. குருநாதன்**
சென்னைப் பச்சையப்பன் கல்லூரி
முன்னைத் தமிழ்ப் பேராசிரியர்

# வினாக்கள் பூக்களாக இருக்கும்போது எந்த நிறத்தைத் தேர்ந்தெடுப்பது?

தாயின் கருவறையிலிருந்தே வினாத் தொடங்கி விடுகிறது. தாயின் வயிற்றில் இருக்கும் குழந்தை வினா வடிவத்தில்தானே உருவாகிறது?

வினாக்குறிதான் வாழ்க்கைக்கு விடையைக் காண முயன்று வியப்புக்குறியாக நிற்கிறது. கேள்வி அனைத்திற்கும் பதில்கள் இரண்டில் ஒன்றாகத்தான் இருக்க முடியும். ஒன்று, தெரியும்; மற்றொன்று, தெரியாது.

விடை சொல்லும் அளவிற்குச் சிலரால் வினாக் கேட்க முடியாது. வினாக் கேட்கத் தெரிந்தவர்க்கோ விடை தெரிந்திருக்கலாம்; தெரியாமலும் இருக்கக்கூடும். விடை சொல்வதைக் காட்டிலும் வினாக் கேட்பது என்பது அறிவு நுட்பத்தின் நுழைவாயில். வினாவிற்கு விடை கண்டுவிட்டோமா என்பதேகூட ஒரு வகையில் ஐய வினாதான். வினாக்களில் பல வகை உள்ளன என்று இலக்கண நூல் கூறும். ஒரு வினாவிற்கு ஒரு விடைதான் இருக்க வேண்டும் என்பதில்லை. வினா, பல விடைகளைத் தன்னுள் பொதிந்து வைத்திருக்கும் ஞானத் தேனடை. ஜென் மதத்தில் காட்சிப்படுத்தப்படுபவை யாவும் வினாக் கேட்பதில் தான் அடங்கிச் செறிந்திருக்கும்.

மனிதன் இன்னும் வினாவிற்கான விடையைத் தேடிக் கொண்டேதான் இருக்கிறான். விடை காண முற்பட்டாலும்கூட அவன் மனம் நிறைவடைவதில்லை. எப்போதும் வினா இருந்து கொண்டேதான் இருக்கும். விடை தேடுவதும் தொடர்ந்து கொண்டேதான் இருக்கும். வினா விதை போன்றது. அந்த விதை பூவாகவும் மலரும், பூகம்பமாகவும் பீறிட்டு வெடிக்கும்.

நாமும் எத்தனையோ வினாக்களுக்கு விடை தெரியாமல் மண்ணில் வாழ்ந்து கொண்டுதான் இருக்கிறோம்.

வினாக்களிலேயே கவிதை வடிக்க நுட்பமும் ஆழமும் சொல்லும் திறமும் வேண்டும். மேலை நாட்டிலும், கீழைத் தேயத்திலும் இவ்விதக் கவிதை மரபினைத் தோற்றுவித்தவர்கள் உள்ளனர். ஜப்பானிய இலக்கியத்தில் கேள்விக் கவிதைகள் எழுதுவது ஒரு மரபாக இருந்துள்ளது. சிலி நாட்டுக் கவிஞர் பாப்லோ நெருடா கேள்விகளாலேயே கவிதை நூல் எழுதியவர். இந்த வரிசையில் கவிப்பேரிமையம் தமிழன்பன் சேர்கிறார். இவர் 'கனாக்காணும் வினாக்கள்' என்று முன்பே இவ் வகையில் படைத்தவர். அந்த வகையின் தொடர்ச்சி இந்நூல்.

'வினா-விடை' என்ற சொல்லாட்சி வெறும் உம்மைத் தொகையாக மட்டும் நின்றுவிடவில்லை. ஊமைத் தொகையாகப் பேசாமல் நின்றுவிடுவது மில்லை. ஒன்றை ஒன்று அடுத்துப் பேசுவது, பேசச் செய்வது. இப்படித் தன்வினையாகவும் பிறவினை யாகவும் இயங்கும் வினா-விடை அறிவின் பரிணாம வளர்ச்சி; சிந்தனை நீரோடை; சூக்குமத்தைப் பொத்தி வைத்திருக்கும் மாயச்சிமிழ். இணை யானதும், முரணானதுமான சொல்லாட்சியைக் கொண்டிருப்பது அவ் இணைச் சொல்.

தமிழன்பன், கேள்வியால் இணைவும், முரணுமான சொற்களைக் கொண்டு ஒரு வேள்வியே நடத்திக் காட்டுகிறார். அவ்வேள்வியில்

இணைவுச் சொற்களாக (parallels) ஒன்றை ஒன்று அடுத்துக் காரண காரியத் தொடர்புடையதாகவும் (cause and effect), முரணில் விளைவதாகவும் (paradox) பல வினாக்கள் தொடுக்கப்பட்டுள்ளன. அலை-கடல்; வண்டு-அரும்பு; சாவி-பூட்டு; இலை-பச்சை; காக்கை-கருமை; வானம்-நட்சத்திரம்; மீன்-கடல்; வேர்-கிளை என இவ்வாறு இணைவுகள் இடம்பெற்றும், கடவுள்-மனிதன்; ஆகாயம்-பூமி; ஆத்திகம்-நாத்திகம்; புலி-மான் என முரண்கள் இடம் பெற்றும் நுட்பமாய் இவற்றைக் கவிதையில் பொருத்திவிட்டுள்ளார் கவிஞர்.

சித்தர் நிலையிலிருந்து சில - இப்படிப் பரவலாகத் தம் கவிநுட்பத்தை இந்நூலில் படர விட்டுள்ளார். எளிமையானதாகத் தோன்றும் எதுவுமே எளிதில் வசப்பட்டு விடாது. இதில் உள்ள கவிதைகளைப் புரிந்துகொண்டு போற்றுவதும் அப்படித்தான். ஆழ்ந்த சிந்தனைக்குப் பிறகே அடை காத்திருந்து வெளிப்படுவதாகத் தோன்றும். பல கவிதைகளும் அப்படித்தான்.

என் பார்வை இது; மற்றவர் பார்வை எது? என்ற அர்த்த பரிமாணத்தின் அடுக்கடுக்கான ஊகங்களை வெளிப்படுத்தும்படியான கேள்விகள் உலா வந்துள்ளன. நூறு வகையான வினாக்களைக் கவிஞர் கேட்டிருக்கிறார். கேள்வி கேட்பதும் எளிதன்று; பதில் சொல்வதும் எளிதன்று என்ற

வகையில் அமைந்தனவாகவே இவை உள்ளன. நாடு, மொழி, கடவுள், படைப்பாளி, சமூகம், இயற்கை, மனிதம், மரணம் முதலியவற்றை நுட்பமான கேள்விக் கணைகளாகத் தொடுத்துள்ளார். தமிழுக்குப் புதிய புதிய கவிதை வடிவங்களைத் தொடர்ந்து - தொடர்பு அறாமல் அளித்து வருபவர் இவர். இத்தகைய முயற்சிகளுக்கு முன்னோடி யாவார்.

நாடும் மொழியும் பற்றிய தொடக்கக் கவிதைகள் சொல்வதென்ன? தமிழ்நாடு பேசினால் என்ன பேசும்? என்பதற்கான விடையைக் கூறிவிட முடியுமா? அது எப்போது பேசும்? எதைப்பற்றிப் பேசும்? பேசுவதற்கான காலங்கள் உண்டா? பேசுவதற்காக அது எவற்றைப் பொத்தி வைத்திருக்கிறது? அது பேசினால் ஏற்படுத்தும் விளைவு ஏதேனும் உண்டா? இப்படி அடுக்கடுக்கான சிந்தனைகளை அள்ளி வருகிறது முதல் கவிதை. நாடு என்பது மக்களும் மொழியும் சார்ந்தது. எழுத்துகளால் உருவாவது மொழி. அந்த மொழிக்கு உணர்வு உண்டா? உயிர், மெய், உயிர்மெய் என்றெல்லாம் எழுத்தை வகைப்படுத்தி யிருக்கிறோமே? இதனால் அதற்கு உணர்வு இல்லாமல் போய்விடுமா? மொழி உணர்வு என்றெல்லாம் பேசுகிறோமே. மொழியில் தோன்றிய எழுத்து உடைந்தால் இரத்தம் சிந்துமா? உயிரும் உடம்பும் முப்பது என்று இலக்கணம் சொல்கிறதே!

உணர்வு இல்லாமலா சொல்லும்! உணர்வு இருப்பதால் இரத்தம் சிந்தும்தானே! மொழிப்போரில் இரத்தம் சிந்தியவர்களையும் நினைக்கத் தோன்றுகிறதே!

மொழியிலிருந்துதானே இலக்கியம் தோன்ற முடியும்? அந்த இலக்கியத்திற்கு நிலைபேறு உண்டல்லவா? வாழும் இலக்கியம் என்ற வழக்கு உண்டெனில், தாழும் இலக்கியம் என்ற ஒன்று இல்லாமல் போகுமா? மொழி இலக்கணத்தில் dead language என்கிற வழக்கு உண்டு. மொழியாலான இலக்கியத்திற்கும் இது பொருந்தும்தானே! செத்து மடிகின்ற இலக்கியம் ஒவ்வொரு மொழியிலும் இல்லாமலா இருக்கும்!

*தமிழ் நம்மோடு பேசினால் என்ன பேசும்?*

*எந்த எழுத்தை உடைத்தால் மொழி*
*இரத்தம் சிந்தாமல் இருக்கும்?*

*வார்த்தைகளில் பிறந்து வார்த்தைகளில்*
*இறந்து இலக்கியம் வாழ்வது எப்படி?*

இத்தகைய எண்ணங்களை நாடு, மொழி பற்றிய கவிதைகள் முன்வைப்பனவாகத் தோற்றம் அளிக்கின்றன.

இப்போதெல்லாம் பரிசு என்பதும், விருது என்பதும் கொடுப்பது என்பது போய் வாங்குவது

என்றாகிவிட்டது. விருது பெறுவதற்குக்கூடக் காசு கேட்கும் காலம். பொருள் கொடுத்து விருது வாங்கும் உலகம். இதுதான் இன்றைய நடைமுறையாகிவிட்டது. பரிசு பெற்ற பின்னணியில், ஆயிரம் கேள்விகள் மறைந்திருக்கும். எதற்காக? ஏன்? எப்படி? என்ற நிலை இதிலும் உண்டு. பின்னணியில் நிகழ்வதை நூல் சொல்லுமா? நூலாசிரியர்தாம் சொல்வாரா? பொய்ம்மைக்குப் பூசை செய்து பரிசு வாங்கும்போது புனைவு இல்லாமல் பேட்டி தர முடியுமா? உண்மை மறையும்போது பொய்ம்மையை விற்றுப் பரிசு வாங்கிப் போலியாய்ப் பேட்டி கொடுப்பதும் உண்டுதானே!

*பரிசு பெற்ற படைப்பு எழுதியவனைப்*
*பற்றிப் பேட்டியில் உண்மை சொல்லுமா?*

என்று கவிஞர்க்குக் கேட்கத் தோன்றியிருக்கிறது.

உலகில் எல்லாம் கலப்படமாகிவிட்டது என்பதை அறியாதவருண்டா? நிசத்தை விடப் போலிகளுக்குத்தானே மதிப்பு அதிகம். உண்மை எது? பொய்ம்மை எது? என்று அறிய முடியாதவாறு பொருள்களில் கலப்படம். மின்னுவதெல்லாம் பொன்னல்ல என்ற பழமொழியும் உண்டே! உப்புக் கல்லை வைரமென்றால் அதனையும் ஏற்கும் கூட்டமும் இருக்கிறதே! நிசத்தை மறைத்து நிழலையல்லவா வணிகர்கள் விற்பனை

செய்கிறார்கள். பப்பாளியின் காய்ந்த விதை மிளகாகிறது; தானியங்களின் நிறத்திற்கு ஏற்றவாறு கலப்படப் பொருள் உற்பத்தி செய்யப்படுகிறது. காய்ந்த பட்டாணிக்குப் பச்சை நிறம் ஏற்றப்படுகிறது. மாம்பழத்திற்குக் கல் வைக்கிறார்கள். உண்மையில் போலி கலந்துவிடுகிறது. போலி உண்மையைவிட மதிப்புடையதாகிறது. போலி போலிதான். உண்மையை மறைக்க இயலுமா? சுயரூபத்தை மாற்றி அமைக்க முடியுமா?

*பப்பாளி விதைக்குப் பயந்து, மிளகு நிறத்தை*
*மாற்றிக் கொள்ளுமா?*

என்று கேட்டிருக்கிறார் கவிஞர்.

தத்துவக் கண்ணோட்டத்தில் அமைந்த கவிதைகளும் இதில் உண்டு. உண்மை, மாயை என்ற இரண்டுக்குமான தோற்றத்தை,

*படத்திலிருந்த பட்டாம்பூச்சி பறந்துவிட்டது*
*ஓவியன் துரத்திப் பிடித்துவிடுவானா?*

என இவ்வாறு காட்சியாக்குகிறார்.

வாழ்க்கையில் சிலர் வித்தியாசமானதாகச் செயல்படுவார்கள். கசப்பில் இனிப்புண்டு என்பவர்களும், இனிப்பில் கசப்பைக் காண்பவர்களும் இருக்கவே செய்கிறார்கள். ஒரு வகையில் இது வாழ்க்கை முரண். அவரவர்

வாழ்வின் அனுமானமும், அனுபவமும் அப்படி! பலருக்கு மரணம் என்றாலே அச்சம். அதனையும் சாதாரணமாக எடுத்துக்கொண்டு மரண பயமே இல்லாமல் இருப்போரும் உண்டு. சிரிப்பைக்கூடச் செலவழிக்கத் தெரியாது வாழ்ந்து, இறந்ததற்கான அஞ்சலிப் படத்தில் சிரிப்பது போன்ற பாவனையில் சிலர் அமைந்து விடுவதுண்டு. வாழ்க்கை முழுதும் இன்பத்தைக் காண்பவன் அந்தப் படத்திலாவது சிரிக்கிறானே! இதனைக் காட்சிப்படுத்தும் கவிஞர்,

*கண்ணீர் அஞ்சலிப் படத்தில் அப்படிச்*
*சிரிக்கிறார்! அவ்வளவு இன்பமோ மரணம்?*

என்று கேட்கிறார்.

மரணத்தை வரவேற்கவும் சிலர் இருக்கிறார்கள். அவர்களுக்கு வாழ்க்கையாதாரம் அதுதான். அன்றாடப் பிழைப்புக்கு அவர்கள் நாளும் மரணத்தை வரவேற்கவே செய்வர். அவர்கள் எண்ணம் அப்படி! மரணமே இல்லாவிட்டால் அவர்களால் வாழ வழி ஏது?

*மரணங்களே இல்லாவிட்டால் வெட்டியான்*
*வீட்டில் விளக்கு எரிவது எப்படி?*

எனக் கேட்கிறார் கவிஞர்.

இயற்கை அற்ற மரணம் கேள்விக்குள்ளாவது உண்டு. அது இயல்பான மரணமா? கொலையா?

தற்கொலையா? என்றெல்லாம் ஐயங்கள் கிளம்புவது இயல்பு. இறந்தவருக்குப் பிரச்சினை இல்லை. அவன் வாழ்வு அவ்வளவுதான். அது முடிந்து போனது. ஆனால் அவன் இறப்பில் மறைந்துள்ள உண்மையைக் கண்டறிவோர்க்கு அல்லவா பிரச்சினை பூதாகாரமாய் உருவெடுக்கிறது.

*விடாது துரத்தும் வினாக்கள் அவன் மரணம்-*
*இயற்கையா? கொலையா? தற்கொலையா?*

என்றெல்லாம் எழும் ஐயம் இயல்பானதல்லவா?

நேரடியாகவும், பூடகமாகவும், குறியீட்டுணர் வோடும் கவிதைகள் பல இதில் இடம்பெற்றுள்ளன. அரசியல் போக்கினை இந்த வகையில்கூட அணுக வாய்ப்புண்டு.

*அலைகளை விற்றுப் பிழைக்கும் கடல்களை*
*நதிகள் எப்படி நம்பும்?*

*நாணல்களை நிமிர்த்தப் போய் - ஏன்*
*வளைய வேண்டும்?*

*அதே ஊர்... தெருக்களின் பெயர்களை*
*மாற்றி மாற்றி என்ன பயன்?*

*சிலையாகிவிட்ட தலைவர்*
*மற்றவர் உடைக்கும் முன்*
*தானே உடைந்து விடுவாரா?*

போன்ற கவிதைகள் மேலே கூறியதற்குச் சான்றாகலாம்.

இந்நூல் இப்படியானதொரு சித்து விளையாட்டினை நிகழ்த்திக் காட்டுகிறது. சித்தர் மனநிலையிலிருந்து வெளிப்படும் ஞான முத்துகளாகவும், நடைமுறை வாழ்க்கையின் வார்ப்புகளில் கண்ட அனுபவத் தெறிப்புகளாகவும், ஞாபக அலைகளில் திரண்டு வரும் வண்ணக் கிளிஞ்சல்களாகவும்......... இப்படிப் பல்வேறு பார்வைகளில் நுட்பமான சிந்தனைகளைச் செப்பமாய்ச் செதுக்கும் நகச் சிற்பமாகவே (manicure art) ஒவ்வொரு கவிதையையும் தீட்டியிருக்கிறார்.

தமிழ்க் கவிதை உலகிற்குப் பெருமை சேர்க்கத் தம்மால் எவ்வாறெல்லாம் முடியுமோ அவற்றைப் புதுமையுடன் அள்ளித் தர ஓயாது உழைத்துக் கொண்டிருக்கும் இவரது பணிக்கு ஓய்வுதான் ஏது? காற்றுக்கும் படைப்பாளிக்கும் ஓய்வுண்டா? இம்முயற்சி வெல்க!

**இராம. குருநாதன்**

Prof. **S.A. Sankaranarayanan**
Former English Professor
Kumbakonam Govt. Arts College
Kumbakonam

# TRANSLATOR'S WHISPERING

*"Ask me no Questions and*
*I'll tell you no fibs"*

- She Stoops to Conquer

*"Answer a fool according to his folly,*
*lest he be wise in his own conceit"*

- Proverbs XXVI 5(AV)

Poet Tamilanban eclipses most of his contemporaries and it is uneasy to rank him in relation to them. His greatness is evident as that of the poets he invokes: Whitman, Bharathi, Bharathidasan and Pablo Neruda.

With a five decade poetic output backing his freshes, he has streamlined a certain poetic

discourse: his word-play ground has markers working on its sprawling ambience.

In recent experiments since 2004, though simple, and saturate, time and again, he seems to echo, 'what a wonder's man the philosopher beset with paradoxes.'

Often , well dug-in Tamil pitches him and makes him reel out conundrums in extraordinary progression.

His current work "*Innumsila Vinaakkal*" (STILL A FEW MORE QUESTIONS) makes him a thespian chorus urging the reader to know of, say, god's inconstant anger or some question always muting and scolding .

Mixed metaphors make and remake his fixed legerdemain! Tamilanban's grief is that his fingers burn secrets.

'What are questions for?' is often the researcher's agony over the part- decipherable 'two sides' of any question whatever.

On translating this current slew, I felt Tamilanban holds over many poems deep in reserve, so that when it is time, they may strike!

Recursions of opposing blocks occur raw, line after line, making inner stresses count.

It is so gentle of Tamilanban to plain speak and also reveal his reproof over the befouled common good .

Like an Erasmus adage, the pithy in him surpasses his eloquence and tugs at the translator.

It comes to my mind, St. Augustine's long-domiciled epiphany, from memory, answering what may pass for the godly! IQuote:

*"God is more imagined*
*than real,*
*Yet more true*
*than imagined."*

My translation of his current work is perhaps a rally in collusion with his prodigal imagination not disallowing remittance in not un-exiled English.

How could I get a Quart into pint pot, I exclaim!

Kudos to Questions and their fall out!

**S.A. Sankaranarayanan**

23-05-2015

1 நாம் தமிழில்
பேசுகிறோம்; தமிழ் நம்மோடு
எப்போது பேசும்?

In Tamil we talk;
when in turn would Tamil
Confabulate with us?

2 தாய் இல்லாத கடவுளுக்குத்
தாய்மொழி இல்லாத குறை
எப்போது நீங்கும்?

By when the want
of mother tongue
for God without Mother would clear?

3

எந்த எழுத்தை உடைத்தால்
மொழி இரத்தம் சிந்தாமல்
இருக்கும்?

**Which alphabet**
**if martyred would save**
**the language from hemorrhage?**

4

சொற்கள் உறங்கும் நேரத்தில்
அர்த்தங்கள்
என்ன செய்து கொண்டிருக்கும்?

**While words snooze**
**in forty winks, what mischief**
**may meanings midge-wing?**

5 ஓசை தடை செய்யப்பட்ட
நாட்டில்
எதற்கு மவுன விரதம்?

In Sound-prohibited
de-voiced country,
why a Lent of golden silence?

6 கவிதை முடிவுற்ற பிறகு
கதவைத் தட்டச் சொற்களுக்கு
எப்படிக் கிடைத்தன விரல்கள்?

Once a poem is shut
can words fork their fingers
to tap the bolted doors?

7

வெட்டுண்ட விரல்கள்
எந்த எழுத்துக்குள் வந்து
மருந்து கேட்கும்?

From off which letter
might the cut fingers
pick up a prescription?

8

வார்த்தைகளில் பிறந்து
வார்த்தைகளில் இறந்து
இலக்கியம் வாழ்வது எப்படி?

Born of words,
buried in words,
how may literature survive them?

9 பரிசுபெற்ற படைப்பு
எழுதியவனைப் பற்றிப் பேட்டியில்
உண்மை சொல்லுமா?

**Will a prize-winning work**
**report ever the truth of its author**
**when interviewed?**

10 இயற்கையே கவிதை ஆகிவிட்ட
ஊரில்
கவிஞனுக்கு என்ன வேலை?

In a town of Nature
Poetry incarnate, what else
is left for a poet to do?

11

கண்டுபிடித்து விளையாட
வார்த்தைகள்
எந்த வனம் தேடிப் போகும்?

To which woodland spot
may words go on picnic
for playing hide-n-seek?

12

ஒருசொல் இறந்ததற்காகவா
உலகத்துக் காக்கைகள் எல்லாம்
துக்கம் அனுசரிக்கின்றன?

Is it over the death of a word,
do all the ravens of the world
observe mourning?

**13** உப்பில் விழுந்துவிட்ட சர்க்கரை
உப்பாகுமா? அல்லது
சர்க்கரை ஆகுமா?

Can glucose mixed up
with common salt turn salted?
or stay malted?

**14** கரிக்கும் உப்புக்குக்
கடல்தேசம் இருக்கிறது! சர்க்கரைக்கு
அப்படி என்ன இருக்கிறது?

For salt's sore saltiness
there is a marine saline sea!
Is there any for sugar to be?

15

பப்பாளி விதைக்குப்
பயந்து, மிளகு நிறத்தை
மாற்றிக் கொள்ளுமா?

Would black pepper
in fear of papaya-seed
beg to bleach its blackness?

16

அலைகளை விற்றுப் பிழைக்கும்
கடல்களை
நதிகள் எப்படி நம்பும்?

How might rivers rick
faith in seas that sell
their swell for survival?

17 பத்துக்குப் பின், பதினொன்று
வரமறுத்துவிட்டால்
பன்னிரண்டு எங்கே திரும்பிப் போகும்?

**If eleven declines to turn up**
**after ten, where then**
**would twelve return to?**

18 கரும்பே என்று மிளகாயைக்
கூப்பிட்டுவிட்டேன் - அதற்காகச்
சர்க்கரை காரமடிக்கலாமா?

**Oof! I called chili,**
**'my sweet cane'! For that,**
**need sugar taste sour?**

19 இரவல் குரலில் பாடுபவனுக்குச்
சொந்தமாய்ப் பாடல்கள்
வேண்டுமா?

Does a singer with loan-voice
need indeed
own lyrics at all?

20 மலர்கள் பாடத் தொடங்கிவிட்டால்
வண்டுகள் இரசிகர் மன்றம்
அமைக்குமா?

If flowers commence
their concert, would drone-bees
configure a connoisseur-club?

21

மழையின் மனத்துள்
ஞாபகமாய் இருப்பது
வானமா? பூமியா?

Is it Earth or Sky
that lurks as memory
in the heart of a rain-cloud?

22

பிடிக்கவில்லை என்பதற்காகச்
சூரியன்
வேறு ஆகாயம் தேடுவானா?

Just on dislike
will sun search for
a contrary cerulean?

**23**

கலப்பைகள்
உறங்கும் ஊரில்
பசியால் உறங்க முடியுமா?

In a country where,
plough-shares lie still,
can hungers starve in sleep?

**24**

நிலா
விழ விரும்பினால், எந்த ஊர்
ஏற்றுக் கொள்ளும்?

If Moon loves to drop down,
which town would
welcome Her dive?

25 மாறாதது இருந்துகொண்டே
இருக்கும்போது
மாறுவதால் என்ன பயன்?

**If constants continue**
**to continue, of what avail**
**are alterings?**

26 நாணல்களை
நிமிர்த்தப் போய் - ஏன்
வளைய வேண்டும்?

**Why unbend the bending reeds**
**and curve**
**hunchbacked in the act?**

27

அதே ஊர்...
தெருப் பெயர்களை மாற்றி மாற்றி
என்ன பயன்?

The good old Town!
street names change
and change ; to what purpose?

28

பழைய வானத்தை விற்றுப்
புதிய வானம் வாங்க
இயற்கை ஏன் நினைக்கவில்லை?

Why not yet, Nature think
of buying a new sky,
selling a senile one?

29 பனித்துளி படுத்து உறங்கச்
சூரிய விடுதியில்
அறை எடுக்குமா?

**Will adew book a suite**
**in Sun's star-hotel**
**for lounge and sleep?**

30 சூரியன் படுக்கப் போகும்போது
வெப்பச் சட்டையைக் கழற்றி
எங்கே மாட்டுவான்?

**Going to bed,**
**where would Sun**
**hang His wardrobe of heat?**

31 இருந்தது இறந்தது இறப்பது
போதும் என்று
காலத்திற்கு எப்போது தோன்றும்?

By when would it occur
to Time: ‘dwelt, dead, dying,
I had , I was, I am, enough!?

32 ஆண் குருவியும் பெண் குருவியும்
திருமணம் செய்து கொள்வது
எந்த வயதில்?

In which age, would the male
and the lady sparrow
Barnaby Bright wed??

33 வானத்தைப் பற்றிப் பாடும்
பாடலில்
நட்சத்திர மணம் இருக்குமா?

**Well, in a Hymn to Heaven,**
**Will there be**
**a stellar fragrance?**

34 தனியாக இருக்கும் கவிஞனிடம்
எந்தப் பறவைக்கேனும்
கூடி வாழ ஆசை இருக்குமா?

**Will any passerine call**
**to mate and live**
**with a solo rhymer?**

35

நதியில் மிதந்து செல்லும்
சிறகுக்கு வானம்
வருத்தம் தெரிவிக்குமா?

Can sky condole
a fowl's feather afloat
on a river-stream?

36

நூலால் ஆனதுதான் ஆடை;
அதற்காக நூலை அணிந்து கொண்டு
வெளியே போக முடியுமா?

Thread on thread, a wear
is a weave; yet, putting on
a mere thread, can we strut about?

37

வீட்டு வாசலுக்கு வந்துவிட்டது
சவப்பெட்டி -
கடைசி மூச்சுவரை காத்திருக்கக்கூடாதா?

Coffin-case on the door-step
has arrived in hurry; why not
wait for departing breath?

38

மறதியை வளர்க்க
வாழ்க்கை இருப்பதுபோல் நினைவை
வளர்க்க என்ன உண்டு?

Life hectic hikes amnesia!
Is there aught else
to foster memory?

39 இலக்கணத்தில் தேர்வு வைத்தால்
இலக்கியம்
எத்தனை மதிப்பெண் பெறும்?

How many credit marks
might literature earn
if tested on a course of grammar?

40 சலங்கைகளுக்குள் வைத்து
மவுனத்தை எப்போதும்
காப்பாற்ற முடியுமா?

Forever can silence be
shut up
in jingling anklets?

41 எந்தச் சிறகை முதலில் வெட்டலாம்
என்று கேட்டால்
பறவை என்ன பதில் சொல்லும்?

How would a bird respond
if asked which of its wings
be first felled?

42 பறவைகள் மனித மொழியில்
பேச முடிவெடுத்தால் - அது
எந்த மொழியாக இருக்கும்?

If birds determine
to chat in human tongue
what may the language be?

**43**

ஒரு கேள்வியைப் பேரனிடம்
தூக்கிப் போட்டதற்குப்
பதில் - பத்துக் கேள்விகளா?

A single question
volleyed to my grandson!
Reply-Ten volleys, how?

**44**

வண்ண வண்ண விடைகள்
மலைச்சரிவில்! வினாக்கள்
எந்த நிறத்தில் இருந்திருக்குமோ?

Colr! smeared answers
on the hill slope-In what
hue might Questions have been?

45 படத்திலிருந்த பட்டாம்பூச்சி
பறந்துவிட்டது! ஓவியன் துரத்திப்
பிடித்து விடுவானா?

The Papillon off the picture flew!
will the painter chase
it and capture?

46 புன்னகை பிறப்பது
எவ்வளவு நேரமோ அதே அளவு
நேரத்தில் இறக்குமா?

Would it take
same split second
for a smile to flash or fade?

**47**

மறதியை வழி அனுப்பி
வைத்தவனுக்குத் தெரியுமா
எங்கே திரும்ப வேண்டும் என்பது?

Does he the escort
to amnesia know
how and where to turn back?

**48**

காலம் காட்டும்
கடிகாரத்திடம் காலஉணர்வு
கொஞ்சமேனும் உண்டா?

Is the clock that strikes
the hour wise with any
little sense of Time?

49 மரணங்களே இல்லாவிட்டால்
வெட்டியான் வீட்டில்
விளக்கு எரிவது எப்படி?

Sans Death
how can the Charnel-keeper's
home be lit?

50 ஒரு நதியின் உள்ளே
உள்ளவை எத்தனைப் பேரின்
தாகங்கள்! கணக்கெடுக்க முடியுமா?

How many thirsts
arelacquered in a river to slake!
count them, can we?

51 உப்பின் குணத்தை மாற்ற
எந்தச் சுவை
நடவடிக்கை எடுக்கும்?

To alter salt's saltiness
which relish
would initiate action?

52 ஓர் ஆசையும் இல்லாத
நிலாவைப் பார்க்க நமக்கேன்
இத்தனை ஆசைகள்?

Why this many raving desires
in us to view
a naked Moon with desire none.

53 தானாக ஓடாத தேரைவிடத்
தானாக நகரும்
நத்தைகள் மேலானவை அல்லவா?

Aren't self-stirring snails
better than the festive cars
that roll not on their own?

54 கிணற்றுக்கு ஐயம் ஏற்பட்டால்
வெளியே போய்
யாரிடம் கேட்க முடியும்?

How and where
can a doubt within a well
jump up out and consult whom?

55

உப்புச் சமாதிக்குள்
கரையவா நதிகள் இப்படி
ஓடுகின்றன?

Do rivers rush fast
only to immerse
in saline cemetery?

56

சிலையாகிவிட்ட தலைவர்
மற்றவர் உடைக்கும் முன்
தானே உடைந்து விடுவாரா?

Would a leader statue'd
shatter on his own
before others undo his?

57 முன்கூட்டியே மரணித்துவிட்ட
கவிதைகள் - எழுதியவன் இறந்தால்
வருத்தப்பட வழி உண்டா?

**Would poems, dead ago,**
**chance to grieve over**
**the poet were he to die?**

58 விதைக்குள் அடங்கி இருக்க
முடியாதவன்
மரத்தில் கிளைகளாக விரிவதெப்படி?

**One uncontainable in a seed,-**
**how can he exfoliate**
**as branch of a tree?**

59 கேட்காமலே
நிழல் தருகிற மரத்தைவிடக்
கடவுள் எப்படி மேலானவன்?

How can God score superior
To a tree yielding
shade unprayed for?

60 பதிலுக்குச் சூரியன்
வைத்துவிட்டுப் போன ஆளிடம்
ஏன் இந்தச் சோம்பேறி வெளிச்சம்?

What for is this
idler-light in a surrogate
sponsored by sun in his stead?

61 நட்சத்திரக் கணக்குத் தெரியாதவன்
வளர்ந்தால் என்ன?
தேய்ந்தால் என்ன?

What if he waxes or wilts,
when he doesn't know
the stellar –Quanta?

62 சாவியைத் தொலைத்தவன் மீது
பூட்டுக்கு
நட்பு வருமா? பகை வருமா?

Would a lock resent
the loser of its key
or for him, turn crazy?

63 உலகத்தின்
கடைசிக் குழந்தை பிறக்கும்போது
பகல் இரவுகள் இருக்குமா?

When the last baby
is born in this world,
will day-night duo be?



64 புன்னகை செய்யத் தெரியாதவன்
பூக்களைப் பார்த்து ஏன்
பொறாமைப்பட வேண்டும்?

Why need a smile-less
stupid one, envy
the flowers' flourish?

**65**

வண்டிடம் பாட்டு இல்லை
என்று தெரிந்து கொண்ட அரும்பு
கதவைத் திறக்குமா? திறக்காதா?

**Would a bud knowing
the bee can't buzz, open her bosom
or stay tight-lipped?**

**66**

ஆகாயம்
கீழே வர முடிவு செய்துவிட்டால்
பூமி என்ன செய்யும்?

**If sky resolves to descend
where would Earth
deign to fare?**

67

வாரம், ஒரு கிழமையைத்
தள்ளிவைக்கத் தீர்மானித்தால்
அது எந்தக் கிழமையாக இருக்கும்?

**If a week were to divorce**
**a day, what may that day be,**
**inhonour of whom?**

68

கடைசி மூச்சைக்
காப்பாற்றி வைத்துவிட்டு, யாரேனும்
இறக்க முடியுமா?

**Can any breathe the last**
**restoring the last breath**
**from Death's embrace?**

69 முத்தங்களை மொத்தமாகச் சேர்த்து
வைத்திருப்பவன் எப்படி இருப்பான்?
சிக்கனக்காரனாக? செலவாளியாக?

**How might the one look**
**that stacks all kisses *in toto*?**
**thrifty? Or unthrifty?**

70 கடவுள்
ஒருவேளை நேரில் வந்துவிட்டால்
எத்தனைப் பேர் நம்புவார்கள்?

**Were God to advent**
**vis-à-vis, how many**
**may believe in His?**

**71**

காக்கைகளின் கருமை இருந்தது
இருளின் புறத்திலா?
பகலின் அகத்திலா?

Was it on Dark's outer,
or Day's core, that crow's black
stays ducking in?



**72**

மெழுகுவர்த்தி உருகுவது
இருளின் கொடுமையை நினைந்தா?
பகலின் தோல்வியை நினைந்தா?

Is it on worry over
Dark's cruelty or Day'sdefeat
that a candle melts?

73 தான் உருகும் மெழுகுவர்த்தி
தன்னைப் பார்த்து
உருகுவார் இல்லை என்றா?

**Does a self-wasting candle**
**feel the absence of one**
**that melts not seeing its woe?**



74 பறவையின்
எல்லாக் கனாக்களுக்கும்
சிறகுகள் உண்டா?

**Do the dreams of a bird**
**fledge with feathers**
**proper as well?**

75

கண்ணீர் அஞ்சலிப் படத்தில்
அப்படிச் சிரிக்கிறார்!
அவ்வளவு இன்பமோ மரணம்?

Mr. Tears in a movie of homage
laugh away to the ceiling!
Is death that sweet and pleasant?

76

தீவுகளின்
கனவுகள் - கடல் அளவு
இருக்குமோ?

Are the dreams of isles
voluminous
as the ocean itself?

77 கடல் தோற்றதென்று
தீவுகள் வெற்றிக்
கொடி உயர்த்துமோ?

Would islands ever hoist
a flag of victory over
seas vanquished?

78 தண்ணீரின் வெற்றி
கடல் என்றால், தரையின் வெற்றி
தீவுகளோ?

If sea be water's win
Aren't isles's
the score of shores?

79 தீவு
மூழ்கிக் கொண்டிருக்கிறதா?
வெளியே வந்து கொண்டிருக்கிறதா?

**Is an isle**
**sinking,- as though-**
**or surfacing up?**

80 வில்கி நிற்கும் தீவுகளின்
சிந்தனைகள்
சேர்ந்தால் கடல் அளவு இருக்குமோ?

**If the ponderings**
**of desparate pelagos merge,**
**won't their sum equal sea's?**

81

கடலுக்குள்
யார் போட்ட கேள்விக்கு
விடைகள் - தீவுகள்.

Are isles answers
to questions anchored
into sea by some unknown?

82

கடவுள்
ஆத்திகனைத் தண்டிப்பதுபோல்
நாத்திகனை ஏன் தண்டிப்பதில்லை?

Why God
tries never an atheist
as He does a theist?

83 இல்லாத தன்னை நம்பும் மக்கள்
இப்படிச் சண்டை போட்டு அழிவதைக்
கடவுள் அறிவானா?

Does God absconding know
how His believers
battle and perish?

84 கடவுள் வைத்துக் கொண்டிருக்கும்
சாபம், வரம் குறித்த புள்ளிவிவரம்
யாரிடம் கிடைக்கும்?

From whom can statistics
be got on curses and boons
in God's Thesaurus?

85 கடவுளை மக்கள் நம்புவதுபோல்
மக்களைக்
கடவுள் நம்புகிறானா?

Even as flocks believe in Him,
Would in turn
God believes in them?

86 கடைசி மனிதனும்
காலமான பிறகு, கடவுளின்
கதி என்ன?

After the last human's
departure, what may remain
in God's domain?

87 வேரிடம்
கேள்வி கேட்டால்,
பதில் கிளைகளிலா?

Ask a root:
'Is the answer
Suspended in branches?'



38 அறிவைத் தொந்தரவு செய்தால்
அதற்குப் பெயர்தான்
சிந்தனையா?

'Disturb Reason'-
Is this then the ratiocination
for thought?

89 விளக்கு, உடன்பாட்டில்
சிந்திப்பதையே, இருள் எதிர்மறையில்
சிந்திக்கிறதா?

**What a lamp concedes to
In agreement, Dark revolts
In opposition.-Is it so?**

90 மரணமும் வாழ்க்கையும்
சேர்ந்து கொண்டபோது
கைவிடப்பட்டவன் மனிதனா?

**On that instant, as death
and life wed, is it Man
given up betrayed?**

91 கேட்பாரற்ற வினாக்களிடம்
பேசுவதற்குத் தேடிப்
பதில்கள் வருமா?

Would answers charge
and chat with Questions,
with none to ask them?

92 கடவுள் இந்த உலகத்தைப்
படைத்தபோது
அவருக்கு என்ன வயது?

When God made this
universe, what was
His Age?

93

கடவுள்
மனிதன்முன் வர ஏன் மறுக்கிறார்?
பயப்படுகிறாரா?

Why it be so that God
declines to come in front
of human? In fright?

94

கரை இல்லா
நதிகளைப் படகுகள்
தேர்ந்தெடுக்குமா?

Will boats or ferry-s
choose ever rivers
that have no banks?

95 விடாது துரத்தும் வினாக்கள்
அவன் மரணம் - இயற்கையா?
கொலையா? தற்கொலையா?

A chevy chase of Questions:
His Death-Natural?
Homicide? Suicide?

96 மீனின் ஆசை
கரையில் ஒருநாள் இருந்துவிட்டுக்
கடலுக்குத் திரும்ப முடியுமா?

Fish's fancy:
A day's retreat on shore,
then back to sea: possible?

97 புலியின் கனவுகள்
மான்களோடு நட்பை
ஏற்படுத்துமா?

**Are feline dreams
facile enough
to befriend fauns?**



98 சாய்த் தூரிகையால்
மலர்களின் நிறங்களைத்
தீர்மானிக்க முடியுமா?

**Can paint-brushes
ever decide flowers'
multi-farious tones?**

99 இலைகளுக்கு
வாழ்க்கை பச்சை நிறத்தில்...
மரணம் பழுப்பு நிறத்திலா?

Life of leaves lingers
in beryl chlorophyl;
Death in auburn yellow, is that so?

100 நரியிடம் நடத்திய
பேச்சு வார்த்தை பற்றி
எலும்புகள் அறிக்கை விடுமா?

Can bones submit
a white paper on
their cheap talk with vixen?

101 கவிஞனின் கடைசிக் கவிதை
அவன் எழுதுவானா? அவன்
மரணம் எழுதுமா?

**Poet's swan-song!**
**will the poet write it or**
**will Death in his behalf?**

102 வினா அலைகள் ஓய்வதற்கு
ஒருநாள் முன் கடல் அலைகள்
ஓயுமோ?

**Would sea-tide subside**
**a day before**
**the Question-wave shall crunch?**



